உ

சிவமயம்.

எழூமூர்

வீராசாமி உபாத்தியாயர்

இயற்றிய

# சிவசங்கர சதகம்.



இஃது

மகாவித்வான்

காஞ்சீபுரம்-இராமசாமிநாயுடு அவர்களால்

பார்வையிடப்பட்டு,



சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.



1906.

உ

சிவமயம்.

# சிவசங்கரசதகம்.



## காப்பு.

### வெண்பா.

சிற்சபையிலாடுஞ்சிவசங்கரேசுரன்மேற்
பொற்சதகமாளும்புகலவே - எற்கருளும்
மாதங்கவத்திரத்தான்மாமலரோனும்பணிய
மாதங்கவத்திரத்தான்வந்து.

### இதுவுமது.

தேவாதிதேவன்சிவசங்கரேசுரன்மேற்
கோவாமணிச்சதகங்கூறவே - மூவாத்
தவளமதவாரணத்தான்முன்பரவுமெங்கள்
கவளமதவாரணத்தான்காப்பு.

---

## நூல்.

கார்கொண்டமே னியன்மன்றல்சூழ் களிகொண்டசெங் கம லன்றருந், தார்கொண்டவிந் திரன்வானவர் தயைகொண்டமாத வரந்தனர், நீர்கொண்டநின் னருள்கொண்டலோ நிறைகொண்ட னர் கறைகண்டனே, சீர்கொண்டசங் கரிபாகனே சிவசங்கரா சிவ சங்கரா. (க)

புல்லாடராவணிவேணியும்பொன்மரன்மழுத்திரிசூலமும்
இல்லாமனல்லறனூதிகளினிதாகவன்றெருநால்வருக்
சொல்லாசமாவுரைசெய்திடவொளிர்தக்ஷிணாமூர்த்தங்கொடு
செல்லாச்சினைக்கல்லாலின்வாழ்சிவசங்கராசிவசங்கரா. (உ)

நாணாகவாசுகிமந்தரநன்மத்தராய்த்திருமாலுடன்
கோணாமல்வானவர்தானவர்கூடிக்கடல்கடையன்றவர்
வாணாளைமாய்த்திடவந்தவவ்வன்னஞ்சையுண்டுயவைத்திடுஞ்
சேணார்பிறையணிவேணியாசிவசங்கராசிவசங்கரா. (௩)

தேராகமானிலமான்மகன்றிறல்சூதனங்கியுமாலுடன்
கூராகவெஞ்சரமாமறைக்கொடுவேகவெம்பரியாகவே
போராரடற்சயவீரர்போற்போய்ப்புன்னகைசெய்தங்குறும்
சேரார்திரிபுரமட்டதென்சிவசங்கராசிவசங்கரா. (௪)

மூலாகமநெறிகண்டநன்மிருகண்டுமாமுனிபுத்திரன்
மேலாய்மிகுசீற்றங்கொடுமேதிப்பிடர்வருகாலனைக்
காலாலுதைத்தவ்வன்பனைக்காத்தோயிடர்தீர்த்தாளெனைச்
சேலார்விழியுமைபாகனேசிவசங்கராசிலசங்கரா. (௫)

தேடாவரும்பொருட்டேடிகீட்டிசைநோக்கியேசெலும்வாணிபன்
காடாகுமவ்வழிகங்குலிற்கார்மாரியாற்சவலைப்பட
வாடாதெனவொருதோழனாய்வந்தாண்டவாறெனையாளுவாய்
சேடாதனன்பணிபாதனேசிவசங்கராசிவசங்கரா. (௬)

ஆறுமொமுடியும்பணித்தலர்தூவுமாவடிகாணவே
மாறுமைந்தன்றந்தையும்பரவன்னமாவாய்க்காண்கிலார்
சீறுபாம்பணிவேணியைச்சேய்க்காய்வளைத்தருள்செய்ததென்
சேறுகுங்குமவண்ணனேசிவசங்கராசிவசங்கரா. (௭)

ஐயாவுனக்கணிசெய்ததேனலர்மாலையையங்காளிலேர்
மையார்குழற்கணிகைக்கணிமறையாளனீவாழ்கோயில்வந்
தையானவருள்செய்கெனவணிகேசமார்முடிகாட்டிநீ
செய்யாவதிசயமென்சொல்வேன்சிவசங்கராசிவசங்கரா. (௮)

அம்பொன்முடிவலலானனார்க்கருளீந்திடுஞ்சேயின்றியே
வைம்பொன்மணிப்பலவீந்தாற்பயனில்லையென்றதனாலுனை

நம்பித்துதிசெயுநாளையினற்பாலனாய்வந்தாண்டசீர்ச்
செம்பொற்சபாபதியெற்கருள்சிவசங்கராசிவசங்கரா. (௯)

வாணாடனைநிலையென்றெழின்மடவார்மயற்கடன்மூழ்கியே
வீணாள்கழித்தேயுன்னிருவிரையார்மலர்ப்பதநாடியே
பேணாதுழன்றிடுமெற்குநீபெருவாழ்வளித்தருள்செய்குவாய்
சேணாகர்பணிதேவனேசிவசங்கராசிவசங்கரா. (௧0)

மகத்தாதிசைவர்கள்பூசைசெய்மலராய்மதித்துயர்கல்லினை
யகத்தாவலாலுனையேயெறிந்தன்புற்றிடுமெச்சாக்கியற்
கிகத்தார்க்கரும்பொருடந்தநீயெனையாளிலவ்விசைநீங்குமோ
ஜெகத்தாதியேயொளிர்சோதியேசிவசங்கராசிவசங்கரா. (௧௧)

காட்டையுடைப்பூராகவோர்கவிகைக்குளேயரசாண்டிடும்
வேட்டைத்தொழிலெயினப்பிரான்வேதாந்தநின்வதனத்திலார்
ஒட்டைக்கணிற்றன்கண்களையுறவைத்தல்போலென்செய்வன்யான்
சேட்டைப்பொறியற்றோர்பணிசிவசங்கராசிவசங்கரா. (௧௨)

வில்லார்மணிமுடிசூடியவிதுவின்குலத்துறுபார்த்தன்முன்
பொல்லாதவைம்புலவாதையைப்போக்கித்தவஞ்செயவந்துநீ
வில்லாலடியுண்டேயருள்வேடிக்கையேமிகநன்றுகாண்
செல்லாரழநகிரிவாசனேசிவசங்கராசிவசங்கரா. (௧௩)

பாண்டிப்பதிதனில்வாழ்வுகொள்பரிசுத்தவாணிபமாதுனை
வேண்டித்துதித்திடவந்தவள்வீதத்தொழிற்கேகூலியா
யாண்டிட்டபிட்டுண்டவ்வினையாகாமையாலடிநீபடச்
சேண்டங்குவோர்க்கும்பட்டதென்சிவசங்கராசிவசங்கரா. (௧௪)

உனைநிந்தைசெய்வோர்வாழ்வுதானுடைபட்டிடுமெனலுண்மையே
யெனவெண்ணயாவரும்வானவர்க்கிறையாமுனையிகழ்வானசொற்
றனையேயுரைத்தேதக்கனற்றலைபோய்த்தகர்த்தலைபாகினான்
சினமின்மையோர்பெறுசெல்வமேசிவசங்கராசிவசங்கரா. (௧௫)

ஆதித்தனையொருபாத்திரமாய்க்கொண்டுநீயந்நாளிலே
பூதிப்புனைந்தோளிர்மெய்யொடும்போந்தேகுலாலன்றன்மனஞ்
சோதித்தவர்க்கூனிக்கிழமர்ச்சுகமீந்தநின்மலதேவமால்
சேதித்துனைத்தொழுவெர்க்கருள்சிவசங்கராசிவசங்கரா. (௧௬)

நீதாஞ்சவுரியர்கூடியேதிருநாவினுக்கரசன்றனை
வாதாடிநீற்றறையுய்த்துமேவென்கற்பிணித்தோயத்தியின்
நீதாயெறிந்திடவேயதைமிதப்பிக்குநின்விளையாட்டென்னே
சேதாம்பல்போன்றொளிர்வாயனேசிவசங்கராசிவசங்கரா. (௧௭)

தொண்டென்றுநீமுறிகாட்டிமுன்சுருதிப்பிராமணனுயவை
யண்டிச்செயுமணநீக்கியெம்மாரூரனுக்கருள்செய்தனைக் [லாய்
கண்டிங்குனைத்தொழுவேன்றனைக்காத்தாள்கிலாப்பவமென்சொ
செண்டேர்விரனதிமோசனுசிவசங்கராசிவசங்கரா. (௧௮)

மாலஞ்சிவாரிதிபுக்கவுமலரோனரூபமதாகவும்
வேலஞ்சுகண்சசிகேள்வனும்விலகுஞ்சலந்தரசூரநின்
பாலஞ்சுவெண்மலைநண்ணவப்பரகன்றனைக்கண்டித்திடுஞ்
சேலஞ்சமாரலைவாயனேசிவசங்கராசிவசங்கரா. (௧௯)

அஞ்சாதவன்கொலைசெய்திடவறியாதவன்னிலையெய்திட
மஞ்சார்குழன்மடவார்மயல்மாறுதுழல்வசையாளனியன்
நஞ்சாயனீயெனையாள்வதேயெழிலாகுமீதறியாய்கொலோ
செஞ்சாந்தணிவரைமார்பனேசிவசங்கராசிவசங்கரா. (௨௦)

யோகுற்றவர்க்கருள்செய்யுநீயோகுற்றனையென்றெண்ணியே
பாகுற்றசெஞ்சொல்வாணிதன்பதியேமுதல்முனிவோர்கள்சந்
தேகத்துமாரனையேவுமத்தெய்வத்திறன்மிகநன்றுகாண்
சேகுற்றமூவிலைவேலனேசிவசங்கராசிவசங்கரா. (௨௧)

தேவாதிதேவாவுன்றனைத்தியானஞ்செய்தேவருமந்தணன்
மேவாவரும்பசிகொண்டுதன்விரையாய்திறந்திடுகாலையில்

தாவாவருங்கோடிவாயனந்தரவேயதற்கருள்செய்திடுந்
சேவார்கொடிப்பணங்கணுசிவசங்கராசிவசங்கரா. (௨௨)

தவநீதிசேர் திருவாதவூர்த்தனிநாயகர்க்காயன்றுநீ
நவஞாலமேனரியானவைநவையற்றநற்பரியாக்குமுன்
உவமானமில்லாச்சிறெஞலோவாமலின்மேற்றனையாளருட்
சிவஞானசற்குருநாதனேசிவசங்கராசிவசங்கரா. (௨௩)

அம்புற்றசெவ்வனசந்தனையணியார்முனிசிரம்வைத்துமே
வெம்பும்மருங்கானிற்செலவிரைவாகமுன்வருசேனமும்
பப்புஞ்சிறைநிழறந்தவப்பாறிற்குவிண்பாலித்திடுஞ்
செம்பொற்சிலையாயெற்கருள்சிவசங்கராசிவசங்கரா. (௨௪)

கானிற்றிரிபசுவாகிநீகாலன்னருங்கன்றாய்மதில்
வானுற்றிடுஞ்சிகரத்திருவாரூரிலேவளவன்மகன்
தானுற்றவத்தேர்க்காலினுஞ்சாங்கன்றெழுந்தகையென்னகாண்
தேனூற்றகொன்றைத்தாரனேசிவசங்கராசிவசங்கரா. (௨௫)

கொக்கின்னிறகொடுவெண்மணிக்கோவைப்புனைவொருசித்தனாய்
மிக்கோர்புகழ்தமிழ்யாறனார்மிளிருஞ்சுவைக்கல்யானையை
இக்குத்தினச்செயலைவைத்தவுன்னிணையற்றசீரென்சொல்லுவேன்
செக்கச்சிவந்திருமேனியாய்சிவசங்கராசிவசங்கரா. (௨௬)

இருந்தாமரைப்பொய்கைக்குளேயிழிபூசுரன்மகனைக்கரா
வருந்தப்பினர்பலநாள்கழித்தவ்வாறறிந்திடுசுந்தரர் [ன்
பொருந்துந்திருப்பதிகஞ்சொலப்புதல்வன்வரும்புகழென்சொல்வே
திருந்தும்பணியணிமார்பனேசிவசங்கராசிவசங்கரா. (௨௭)

கொங்கார்குழற்சிலையார்நுதற்குயிலார்மொழிமயிலார்விழிப்
பங்கேருகவதனத்திருப்பாவைக்குநீபகர்தாவென
மங்காதருள்செயுமின்னையேவாழ்த்தென்முனேவாராதெனே
செங்காவியங்கனிபாகனேசிவசங்கராசிவசங்கரா. (௨௮)

தாவும்புலிக்கான்மாமுனிதனையற்குணப்பாலற்றனை
மேவித்துதிசெயமாறுயில்வெண்பாற்கடறனையீந்தவுன்
ஏவற்றலைக்கொளுமென்றனுக்கின்றீயவேறொன்றில்லையோ
சேவற்கொடிச்சேய்தந்தையேசிவசங்கராசிவசங்கரா. (௨௯)

தாய்வேண்டிலன்றமர்வேண்டிலன்சற்றும்பிதாதனைவேண்டிலன்
சேய்வேண்டிலன்புவிவேண்டிலன்செற்றார்நலந்தனைவேண்டிலன்
மாய்வாகுமில்லவள்வேண்டிலன்மாதேவநின்னருள்வேண்டுமுன்
சேய்வேண்டும்வேலினையீந்தவாசிவசங்கராசிவசங்கரா. (௩௦)

படியேழ்சுமந்திடுமானைகள்பதறித்திடுக்கிடவேபணி
இடியுற்றெனத்திசைமேவுவோரிரியத்தவமுனிவோர்விடுந்
துடியைத்தரித்தாயென்மனத்துயர்நீக்கனிற்கரிதாகுமோ
செடியற்றமாமறையோர்புகழ்சிவசங்கராசிவசங்கரா. (௩௧)

கரிதானமானிடதேகமிங்கடியேனெடுத்ததனுன்மிகப்
பெரிதானவுன்னருள்வேண்டினேன்பின்னென்பதேபிழையாகுமே
விரிபாணிலாவெயிறுந்தழன்மேவுஞ்சிகைக்கொலையாளராய்த்
திரிதானவர்குலகாலனேசிவசங்கராசிவசங்கரா. (௩௨)

ந்தேரூரற்குவடெட்டுமிச்செசமுஞ்சிதைத்திடுவென்றுரை
ந்தேறுனம்முனிவோர்விடத்தழல்வீசியேநின்றீதிலே
ந்தேவிபூம்மழுவைக்கரம்வைத்தாயெனக்கருள்வைப்பைபோ
செந்தேன்மலர்ப்பதவண்ணலேசிவசங்கராசிவசங்கரா. (௩௩)

கனப்பெருவெளியின்மதிகலையுண்ணவல்லவரான்விடும்
கன்மானைநின்கையிலேந்தலுக்கிழிவல்லவென்றனையுன்பதத்
கம்வைத்தலீதறியாய்கொலோவடியாருயிர்க்குயிராயுறுஞ்
சகநாதசற்குருபோதகற்சிவசங்கராசிவசங்கரா. (௩௪)

மூவத்துள்வாழரவோர்கடம்பணியால்வருமழல்கால்விழி
மலைக்கொடுங்கதமீறிவந்துறலேயதன்சருமத்தினைத்

தழுவித்தரித்திடுமோடையாய்தமியேற்கருடருவாய்கொலோ
செழுமைத்தருங்கைலாசனேசிவசங்கராசிவசங்கரா. (௩௫)

மாப்போதசங்கமரூபமாய்வந்தன்றுநீயொருமைந்தனைத்
தாப்போதவுண்கறிபாவெனத்தருமன்புளோர்க்கேயுன்னருள்
காப்போதுவல்லாற்கன்மனக்கடையேற்றமுண்டாமோசொலாய்
சேப்போதெனும்பதநாதனேசிவசங்கராசிவசங்கரா. (௩௬)

பந்தப்பெருந்தொடரற்றிடப்பயில்வேள்வியோர்தன்னேவலால்
வந்தப்பலபணிதன்னையேமகிழ்சேர்கலன்றனுகவே
சந்தப்புயத்தணிகின்றதுன்றகையென்பனோதயையென்பனோ
செந்தண்கமிக்கையினமாலையாய்சிவசங்கராசிவசங்கரா. (௩௭)

பொல்லாதவெங்கொலைசெய்யவேபுகுவன்முயலகனைப்பவம்
இல்லாதவுன்பாதத்துறமியலீயுகின்றனைவாழ்த்துமிக்
கல்லாதவிவ்வெளியன்றனைக்காவாதுனக்கறமோசொலாய்
தில்லைபுரிவாழ்சுந்தராசிவசங்கராசிவசங்கரா. (௩௮)

செந்தீசிறக்குறளுக்குமுன்செந்தாமரைப்பாதந்தொழத்
தந்தாயருட்கண்ணென்னிலுன்சரணண்டியேசரணென்னுமென்
சிந்தாகுலந்தனைநீக்கிடாச்செயலென்னவிவ்வியலென்னகாண்
செந்தாமரைக்கண்ணன்றொழுஞ்சிவசங்கராசிவசங்கரா. (௩௯)

பொய்யன்கொலைக்களவுஞ்செயும்பொல்லாதவன்புலையேமிகும்
வெய்யன்பொறாமையையுட்கொளுமிகுபாதகன்மிடியோர்க்கிடாக்
கையன்சளுவினுனன்னெறிகருதாதயான்கதிசேரநின்
செய்யன்பருளுளதாகுமோசிவசங்கராசிவசங்கரா. (௪0)

கற்றூக்கள்பற்பலமேய்த்திடுங்கண்ணன்மலர்க்கடவுண்முனம்
முற்றூச்சினங்கொண்டேயவர்முடுகும்பொழுதிறைநீவரச்
சற்றேனுமஞ்சாவிதிதலைகொய்தவாமூவாசையைச்
செற்றார்தொழும்பொற்றாளனேசிவசங்கராசிவசங்கரா. (௪௧)

மெய்யாகநின்னருள்வேண்டினேர்மேவாதபாக்கியமில்லையாற
பொய்யாகவாஞ்சைசெயினுலுனைப்போற்றுந்திறம்பொய்யல்லவே
ஐயாவினியடியேற்குநின்னருள்கிட்டுமாறுளதாகநீ
செய்யாவிடிலெவ்வாறுய்வேன்சிவசங்கராசிவசங்கரா. (௪௨)

அம்போதமேமிகும்வாவியினருகாவுறைந்திடுமந்தணர்
தம்போதமேன்மைகள்குன்றிடச்சமர்செய்தவர்தவமாய்த்திடும்
வெம்போதமாமுககூரனைவிளியசெயும்விறலவீரவென்
செம்போதகந்தனிலுற்றவாசிவசங்கராசிவசங்கரா. (௪௩)

கொம்பொன்றினான்மண்கீறியங்குறுதானவன்றனைமாய்த்துபின்
பம்பும்முயிர்த்தொகையாவையும்பதறச்செயுமொருகேழலை
வெம்புஞ்சினத்தாற்கொன்றதின்வெண்கோடணிவிசயத்தினைச்
செம்பொன்மலர்க்கிறையுஞ்சொலாய்சிவசங்கராசிவசங்கரா. (௪௪)

பெருமாறனொருகானிலேபலவேட்டைசெய்தேபின்பவர்
வருமாறில்வெம்பசிமேவவுன்வடிவின்றியுண்ணேனென்னநின்
னுருமானவேசெய்யாப்பினுன்னுருவானதென்றேகோசொலாய்
திருமாமறைசொலும்வாயனேசிவசங்கராசிவசங்கரா. (௪௫)

பந்தார்கரப்பரவைபயில்பருமாமனைக்கொருதூதனு
பந்தாருவின்மலர்தூவவிண்ணயனுதியோர்படியாரெலாஞ்
சிந்தாகுலங்கொளவன்றுநீசென்றாயெனுஞ்சீர்காணவோ
செந்தாமரைத்தாளானதேசிவசங்கராசிவசங்கரா. (௪௬)

வைதிகமாமுனியன்பினான்மண்மாரிபெய்வித்தொன்னலர்
நைவித்தபோதவ்வேதயன்னுதாகநியேதென்றிடப்
பொய்மேவுமவ்வூர்நீங்குமுன்பொற்பாதநறுகுறிபின்வரச்
செய்தாண்டதென்பாலில்லையோசிவசங்கராசிவசங்கரா. (௪௭)

நயங்கொண்டகார் பெய்யாததா னனிவந்திடுங் கலிவெம்மையாற்
பயங்கொண்டுனைப்பூசிப்பவன்பசியான்மெலிந்திடனீங்கவே

வயங்கொண்டவெண்மணலைத்தினும்வண்சோறெனச்செய்தன்றநீ
செயங்கொண்டதின்றிலையோசொலாய்சிவசங்கராசிவசங்கரா.(௪௮)

பாலென்னவேயொளிர்வெள்ளியம்பணிமாமலையுறதேவைநண்
பாலேதவஞ்செயுமாறுபெண்பாலேவருமுனிவோர்கள்சொல்
லாலேயவர்க்கருள்செய்ததாலடியேற்குமிங்கவ்வேண்டுமா
சேலேமருள்விழிபாகனேசிவசங்கராசிவசங்கரா. (௪௯)

ஆனாலுமென்போற்றீயருமையாவினைப்போற்றாயரும்
வானாட்டுமிவ்வையத்துளும்வாய்மைபசமற்றோரின்மையாய்ப்
போனாரெனிலினியவரென்புகர்நீக்குவார்நீயேயருள்
தேனார்மலர்த்தொடைவேணியாய்சிவசங்கராசிவசங்கரா. (௫0)

திகழுங்கலிங்கத்தாதிபன்தேகத்திலாகியகுட்டநோய்
இகழ்வாலவனுயிர்நீக்குவானென்னும்பொழுதினிலுன்னருள்
மிகவாழ்வுதந்தாயாகையான்மிடியேற்குமவ்வினைவேண்டுமோ
செகநாதனேமிகுபோதனேசிவசங்கராசிவசங்கரா. (௫௧)

சிரமாலைகண்டிகைகுண்டலந்திகழ்நீறுகற்றோயாடையொண்
கரமாலையும்கொடுகானிலேகாயாமருமலர்வண்ணனுங்
கருணாலயாவளிசேயெனக்கனமாதவஞ்செய்பேதருள்
சிரமாலையாயருள்பாரையாசிவசங்கராசிவசங்கரா. (௫௨)

மகவானொருமகமேசெயவளர்விச்சுவவுருவன்னெனுந்
தலையாளனைக்குருவாக்கவத்தவனேசெயுந்தவறாலரி
யகமேகொதித்தவனைக்கொலவடர்தீவினைதீர்த்தாண்டதே
சிகமேலவாசிகபூசிதசிவசங்கராசிவசங்கரா. (௫௩)

துருவாசமாமுனிசாபமேற்சூழ்ந்தேவருமொருநான்குகோட்
டுருவாரணமுனையேத்துமவ்வழிநீயதைக்காத்தாண்டனை
மருவார்கடற்குள்ளாக்குமிவ்வன்னெஞ்சனக்காமோமுனஞ்
செருவாரணத்துரியைப்புனைசிவசங்கராசிவசங்கரா. (௫௪)

# சிவசங்கரசதகம்.

[illegible]ச்சடைகட்டியையம்பொறிவெட்டியே
போர்[illegible]செப்புரைசெப்பித்தும்பொழுதேகாலனும்
[illegible]குரோணோதிபோரேவேலவத்தாண்டருமௌளம்மையனே
[illegible]வணியாசிவசங்கராசிவசங்கரா. (௫௫)

நாராயணன்மேருனினின்னலையார்சிலம்பணிதாளினில்
ஓராயிரமலர்கொண்டுநெஞ்சுறவேயர்ச்சிக்கும்பொழு
தோரார்மலரொன்றின்றியேயிருநோக்கிலோர்கண்சாத்தமற்
சேராழிமாயவனுக்கருள்சிவசங்கராசிவசங்கரா. (௫௬)

முற்றுமதியணிவேணியாமூரன்மலையெனவட்டத்தில்
சற்றுகிலுந்தொலையில்லெனச்சாற்றுந்தாதகையின்புற
வெற்றுவருட்குறனுண்ணவேமகிழ்தேவமானிடமாவரி
செற்றுரதனதளாடையாய்சிவசங்கராசிவசங்கரா. (௫௭)

அலையாறுசூடியவெந்தையென்னகட்டிற்பசியனன்மாறவே
தொலையாவருள்செய்தாளெனச்சொல்லுங்கடிகைக்கீந்தனே
நிலையாதுமின்றியேவாடுமெற்கேநின்னிருதாடந்தருள்
சிலையார்நுதற்பரைநாயகாசிவசங்கராசிவசங்கரா. (௫௮)

பொன்மாலைவாரிதிதோயவேபுகலத்திருமகளாகிய
மின்மாலையங்குழனின்னிருமிளிர்பொற்சிலம்படியேற்றிடக்
கன்மாமலராக்கொண்டவாகடல்கூடலில்வரவேயருள்
தென்மாமலைத்தவனார்துதிசிவசங்கராசிவசங்கரா. (௫௯)

மாயங்கொளுங்கொலைசெய்கலைவலையென்னமாவிழியார்மயல்
போயந்நான்மறைநூபுரப்பூந்தாளினைத்தொழவன்பருள்
தூயம்பிகைதனமார்புயாசுடருற்றவெவ்வயில்வெற்றிவேல்
சேயன்றனைப்பெறுமூலனேசிவசங்கராசிவசங்கரா. (௬0)

தங்குஞ்சராசரமோடுமெத்தலமும்படுங்கடைநாளினில்
பொங்குந்திருமாலேடயன்பேற்றிப்பணிந்திடமுன்புநின்

அர்கத்திலாரோணஞ்செயுமையாளெனைக்கையாதரும்
சிகத்துரிபுனையண்ணலேசிவசங்கராசிவசங்கரா. (௬௧)

வேலாவலயந்தன்னைடேமேவுர்புனற்கரசேவிமுன்
கோலாகலஞ்செய்தாலவாய்க்குலையச்செயமவ்வீரனை
வேலாலடுவென்றுக்கிரவேர்சற்கருள்செய்தாண்டனை
சிலாகமமறைமூலனேசிவசங்கராசிவசங்கரா. (௬௨)

கமனேர்கபோதகமாகவேர யனையாளிறைநீயொரு
கிமிர்மாவலவி வேடனாய்நிலவித்தொடர்ந்தேஞாலமேல்
நிமிபென்னுமன்களிகொள்ளவே நிறைசெல்வமாம்பொருடந்திடுஞ்
சிமயப்பருப்பதவிற்கராசிவசங்கராசிவசங்கரா. (௬௩)

விக்கியாபனஞ்செய்திந்திடவேதம்வலோனிலையென்றமே
முக்கியாதிகாரணமாதவமுனிவோர்துயருறுகாலையிற்
றிக்கியாதினுங்களிகொண்டிடச்சேயென்னவந்தநல செய்தைமால்
சிக்காவுளியெனைய ஞவாய்சிவசங்கராசிவசங்கரா. (௬௪)

சுசியுற்றாத்திணய்யாவையுஞ்சோரர்கொடுபோனரென
அசைவற்றுசெந்தமிழ்மாறனாருந்திருச்சவைதன்னிலே
வசியர்குலமன்னாகியேவந்தேநவமணிதந்தவா
சிசுவென்னையாளுனைநம்பி னன்சிவசங்கராசிவசங்கரா. (௬௫)

அனலார்விழியிருகோடுடைமதிருங்குரலோடுகூடலிற்
சினமாரவந்தேயேற்றிடுஞ்சிந்தூரமேபொடியாகென
மனுநீதிமாறன்கையினிலமாய்த்தேமகிழ்கொளுநாதயான்
தினநின்பணிசெயுமாறருள்சிவசங்கராசிவசங்கரா. (௬௬)

துயிவதுமில்ல தெங்கணுஞ்சார்ந்தெவ்வகையுடலிர்புகுர்
தயர்வேசெயும்பண்டாசுரன திசூரமாய்த்தமரர்க்குமுன்
துயர்யாவுதீர்த்தருள்செய்தவாதொழுமென்வினைவிடைகொள்ளவா
செயவீரனைத்தருமுக்கிராசிவசங்கராசிவசங்கரா. (௬௭)

தாரார்புயக்குலசேகரத்தமிழ்மாறனூர்வினதாலயம்
பாரார்புகழ்கொண்டேத்துமுன்படிவந்தனைக்கண்டேங்கியே
வாராயரவணிவேணியாமாறித்திருவடிவைமெய்யனச்
சீராரருள்செய்தாண்டவாசிவசங்கராசிவசங்கரா. (சுஅ)

கனலூற்றிடும்விழியுங்கொடுங்காலூற்றிடும்புழைநாசியும்
மனவேகமோடத்திவேகமாய்மடமார்சமணர்களைவிடும்
பனகந்தனைக்கண்டித்துமுன்படியேழ்புகழ்மாறற்கருள்
சினமற்றமாதவர்போற்றிடுஞ்சிவசங்கராசிவசங்கரா. (சுகூ)

திரமேவுவிண்ணவர்மண்ணவர்செறியைம்புலப்பகைவென்றியல்
வரமேதருமுனிவோர்க்கெலாம்வாழ்வும்பெறுஞ்சுகநன்னெறித்
தரமேமுதற்பயனல்கிநின்றருமட்பரித்துவசத்தனே
சிரமாமலைத்தேவேயருள்சிவசங்கராசிவசங்கரா. (எ0)

காரின்வளங்குன்றித்துயர்க்கடல்வீழ்ந்துழக்கியசிப்பாநற்
றாரின்புக்குலபூடணத்தமிழ்மாறனின்றிருமுன்னர்வந்
தாரின்புறவெனையாளுவாரமல வெனப்போற்காசருள்
சீரின்கலாநிதிசேகராசிவசங்கராசிவசங்கரா. (எக)

கனமேகுழல்சயலேவிழிகனியேமொழிதனிமின்னெல்
அனமேநடையெண்ணாயிரமரிவைக்குமுன்றொடிபூட்டியவ்
வனமேதிகழுலையோடுபேவந்தேதடருள்செய்தாய்மனச்
சினமேதவிர்த்தெனையாளுவாய்சிவசங்கராசிவசங்கரா. (எஉ)

கோதாம்பலநெறிபோக்கியேகுளிர்பூந்திருவடிதன்னிலே
தீதாம்படலவலர்நீக்கியேதினநன்மலர்கொண்டேத்திட
வாதாம்பலகரணத்திரும்மலமுங்கெடவந்தாண்டருள்
சீதாம்புயசரணாகதிசிவசங்கராசிவசங்கரா. (எங)

நிதமேயுனைத்துதிசெய்கிலேனினதன்பர்தாடொழுதுய்கிலேன்
மதமேயறக்கலைகற்றிலேன்மனமேநிலைபெறவுற்றிலேன்
கதமேகொண்டாதர்களாசையார்கவலைப்படாதெனையாள்விக
சிதமேவியதிரிநேத்திராசிவசங்கராசிவசங்கரா. (எச)

போதுக்குளேநறையானவைநீபொருளுக்குளேபொருளானவைநீ
வேதத்துளேயொளியானவைநீவிண்ணுக்குளேவெளியானவைநீ
நாதத்துளேவிந்தானவைநீநவைபற்றநற்சுவையானவைநீ
சீதப்புனன்மகுடாபகாசிவசங்கராசிவசங்கரா. (௭௫)

ஆற்றின்னிடிகரையார்தருவலர்தாமரைத்தளிர்நீரும்வண்
காற்றின்னலைசாற்பசராய்க்கடுநோயினன்பரிசுவாடினேன்
நீற்றைப்புனைந்திடுமெய்யனேவிமலாதடுத்தாட்கொள்ளுவாய்
சீற்றந்தவிர்முனிவோர்தொழுஞ்சிவசங்கராசிவசங்கரா. (௭௬)

கலையைத்தொடர்புலியென்னவேகலுழன்றொடரவென்னவே
வலையிற்படும்புள்ளென்னமாவழலிற்படும்புழுவென்னவே
மலைவுற்றநேயத்தனைநின்கையின்மழுவிற்கிரைதானாக்குவாய்
சிலையாமலையணிகையனேசிவசங்கராசிவசங்கரா. (௭௭)

வதைபாவதைத்திடுவாதநோய்மாளும்படியாநின்னருட்
புதையருளமேவாதசெம்பொற்சோதியேபுகழாதியே
விதையாயமறைவேராய்வருவிமலாமுனிவரர்போற்றிடுஞ்
சிதையாதவர்புதசிற்பராசிவசங்கராசிவசங்கரா. (௭௮)

கார்கண்ட நற்பைங்கூழெனக் கலைகண்டவொண் பிணையெ
ன்னவும், ஏர்கொண்டமா மதிகண்டிடு மெழில்வேலைநீத் தம்போல
வே, போர்கொண்டவென் பிணிநீக்கிநின் புதுமாமலர்த் தாளைய
ருள், சீர்கொண்டநற் றேசோமயா சிவசங்கரா சிவசங்கரா. (௭௯)

கொலையேபழுத்திடும்வேற்கணார்க்குருகிநதுயர்கொளுமென்மன
நிலைபெற்றிடவருள்செய்தவாய்விமலாமணக்கமலாலயன்
அலைமேவியதிருமால்பணிபமலாவடற்கழையேந்திய
சிலைவேடனையரிசெய்தவாசிவசங்கராசிவசங்கரா. (௮௦)

பாரொன்றுநின்புகழோதிலேன்பரவித்திருவடிதாழ்கிலேன்
நீரொன்றநின்முடியாட்டிலேனினதன்பர்தாடொழுதுய்கிலேன்
போரொன்றும்வெவ்வினைதீர்த்துநின்பொற்றாமரைத்தாளையருள்
நீரொன்றகார்விடமுண்டவாசிவசங்கராசிவசங்கரா. (௮௧)

தூதாகினுமொருவற்கு முன்றூதைக்குமோர்சாயாயது
போதாமலேயமுதுங்கொடுபொருகானிலேயீந்தாயவர்
மூதாதையோமூதன்னையோமுன்னப்பனோவென்னப்பவ
நீதாமழுப்படையாளனேசிவசங்கராசிவசங்கரா. (அஉ)

நீரும்விடநீரூர்ந்திடுநீணாகமுங்கோணுமதித்
தாரும்மலர்த்தாரும்பணித்தடமார்பமுமடற்சூலமும்
ஆநந்தழலதுபூத்திடுமணிநீறுமாதொருகூறுமாய்ச்
சிறந்துவெள்விடையாயருள்சிவசங்கராசிவசங்கரா. (அஙு)

கல்லாலெறிந்தவருக்குமுன்காலாலுதைத்தவருக்கும்வல்
வில்லாலடித்தவருக்குமேவிரைவாயருள்செய்தாணடனை
சொல்லாரணமுடிநீடியதூயாவுனைதமதாழவன்மனஞ்
செல்லாவெனையுங்காப்பைகொலசிவசங்கராசிவசங்கரா. (அச)

செந்தாமரைமுகமென்னவேசேலேயிருவிழியென்னவே
சந்தார்தனம்வரையென்னவேதளர்சிற்றிடைதுடியென்னவே
கொந்தார்குழல்முகிலென்னவேகுலையுடைவாராசையாஞ்
சிந்தாகுலந்தீர்த்தாளுவாய்சிவசங்கராசிவசங்கரா. (அரு)

வாதப்பெரும்பிணியோடுளம்வாடித்திகைத்திடுவேனை நின்
பாதத்துகளடைவித்துமுன்பவநோயையுந்தீர்ப்பாய்குழைக்
காதைப்பொரும்விழிபங்கனேகடுவார்ந்தமைக்களனேசெழுஞ்
சீதப்பணிக்கதிர்சூடியசிவசங்கராசிவசங்கரா. (அசு)

அந்தாமரைத்தவிசார்தருமயனேமுதற்பலதேவரு
நந்தாவுயிர்க்குயிராமுனைநாடோறும்வந்தனைசெய்துதே
னுந்தார்மலர்க்கொடுபூசைசெய்துற்றார்களியானென்செய்குவேன்
சிந்தாகரன்வளர்பாகனேசிவசங்கராசிவசங்கரா. (அஎ)

பரமானநின்பதபங்கயம்பணியாமன்மெல்லடிமேவுறு
புரமாதராசையினுழல்புலையேனையோர்பொருளாகவே
திரமானநின்சரணாம்புயத்தேனாருட்கடன்மூழ்கநீ
சிரமாலையாயருளப்பனேசிவசங்கராசிவசங்கரா. (அஅ)

அவமானகாரியமென்னிடத்தளவில்லையுன்னடியார்க்குநற்
றவமாம்பணியுஞ்செய்கிலாத்தமியேனினுஞ்சொலவேண்டுமோ
நவமானநின்னருள்செய்வதேநலமாமுமையிடமாகிய
சிவமானதற்பரமூலனேசிவசங்கராசிவசங்கரா. (௮௯)

மங்காதகாதலையுன்றன்மேல்வைத்தார்கள்சீர்பெற்றார்களென்
றிங்காரியர்பலருஞ்சொலுமிசைகேட்டுன்மேன்மிகவேட்டவென்
பங்காகியேயவர்வாய்மொழிபழுதென்றிடாப்படிசெய்குவாய்
சிங்காரமங்களதேவனேசிவசங்கராசிவசங்கரா. (௯0)

அறியேனையாவறமென்பதையருமாமறைமுடியாயெனக்
குறியேனையாவுளநெக்குறக்குழையேனையாமடவார்கள்மேல்
வெறியேனையாநினதன்பர்தாள்மேவிப்பணிபுரியாதவிச்
சிறியேனையாள்முகலிங்கனேசிவசங்கராசிவசங்கரா. (௯௧)

சதாகாலநின்னருணாடுமென்சலனந்தவிர்த்திடவேண்டுமெற்
புதாகாணக்குருகேசொலேம்பொறியிற்செலுமனநிற்கபொற்
பதாகார்வணன்பங்கேருகன்பணியும்பழம்பொருளாகுநற்
சிதாகாசசின்மயதேவனேசிவசங்கராசிவசங்கரா. (௯௨)

சுத்தத்திருக்கயிலாயமேற்றோன்றுஞ்சுகாதீதச்சுக
முத்தத்திருக்கின்றோய்நிதமுனிவாதிவந்திடோசெயு
மித்தத்திருட்கிசைவாகியானிளையாதிருந்திடவேண்டுமென்
சித்தத்திருக்கைநீக்கியாள்சிவசங்கராசிவசங்கரா. (௯௩)

மனமாதியாங்கரணங்களென்வசமாகவுமயலேதருந்
தனமாதியாமூவாசைநோய்சாராமலிச்சகமீதிலே
இனமாதியாம்பலபேதமேயெய்தாமலென்றனையாளுவாய்
சினமால்விடைமிசையேவருஞ்சிவசங்கராசிவசங்கரா. (௯௪)

பொருளேதுநின்னருளல்லதுபுகழேதுநின்றுதியல்லது
மருளேதுநின்கழல்கண்டபின்மகிழேதுநின்னன்பல்லதிங்
கிருளேதுனையுட்கொண்டபின்னிணையேதெனக்கிப்புவினிற்
றெருளேதுதைக்கிடுவோர்பணிசிவசங்கராசிவசங்கரா. (௯௫)

அத்தாதிதித்தொழில்சிட்டிசங்காரஞ்செயுமரனேமலத்
தத்தாதியிற்பிறவாநெறிதப்பாதருளிப்போதுநீ
சுத்தாதிரிபுரைநாதநற்றுரியங்கடந்திடுசோதியே
சித்தாதியோர்பலருந்துதிசிவசங்கராசிவசங்கரா. (௯௬)

துர்ப்போதனைத்தொழிலார்சொலுஞ்சோற்கேட்டுடன்சுழலாமலே
நற்போதனைக்கிடமாக்கியென்னவைதீர்த்திடுநாதாந்தநின்
அற்போதனைக்கிலையென்னிடத்தையாவிதேமெய்யாகுமே
சிற்போதசறகுருவேயருள்சிவசங்கராசிவசங்கரா. (௯௭)

உதையாதிபாற்கரபோற்றியென்னுயிராகிநின்றாய்போற்றியன்
பதையாய்த்தருள்வாய்போற்றிநல்லானந்தவாரிதிபோற்றிமன்
பதையாவருங்குருபோற்றிபற்பலவாகியபதிபோற்றியே
சிதையாதசிற்பரபோற்றியேசிவசங்கராசிவசங்கரா. (௯௮)

பரமேந்துபூரணமேந்தியென்பவநாசதற்பரபோற்றியுன் [ன்
வரமேந்துபுண்ணியர்போற்றுகண்மணிபோற்றிமாநிதிபோற்றிபொ
னுரமேந்துமால்பணிடாதவுத்தமபோற்றிசிற்சுகபோற்றியச்
சிரமேந்துகையாபோற்றிநற்சிவசங்கராசிவசங்கரா, (௯௯)

போதாசரண்பரிபூரணப்பொருளேசரண்புரையற்றவோர்
நாதாசரணெனையாண்டருணம்பாசரணறையாமலர்ப்
பாதாசரணென்சொற்கொளும்பரனேசரண்பரிந்தாண்டனே
நீதாசரண்சிவனேசரண்சிவசங்கராசிவசங்கரா. (௧௦௦)

வான்வாழிநான்மறைவாழியான்வாழ்த்துந்திருச்சதகத்துடன்
மான்வாழியுன்மழுவாழிபொன்மலைபன்னவெண்புயம்வாழியுன்
னூன்வாழியன்பர்கள்வாழியுன்னருள்வாழியாரியாவாழிசெந்
தேன்வாழ்மலர்ப்பதம்வாழியிச்செகம்வாழியுன்சீர்வாழியே. (௧௦௧)

முற்றிற்று.

